ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 T I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2019**

ඉතිහාසය I
வரலாறு I
History I

04.12.2019 / 1300 - 1400

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
*One hours*

**கவனிக்க :**
(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக. இவ்வினாத்தாளுக்கு **80** புள்ளிகள் வழங்கப்படும்.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பின்வருவனவற்றுள் நாணய விஞ்ஞானம் பற்றிக் கற்கும் விடயம் எது?
(1) உலோகக் கைத்தொழில் (2) கட்டட நிர்மாணக் கலை
(3) மட்பாண்டக் கைத்தொழில் (4) புராதன நாணயங்கள்

**2.** அனுராதபுரக் காலத்திலிருந்து கோட்டைக் கால ஆரம்பம் வரையான வரலாற்றைக் கற்கும்போது அதற்கு உதவும் தேசிய இலக்கிய மூலாதாரங்கள் பெருமளவில் எந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன?
(1) சமயம் (2) பொருளாதாரம் (3) அரசியல் (4) சமூகம்

**3.** வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் வாழ்ந்ததாகக் கருதப்படும் 'மினிஹா கல்கந்த' எந்த வசிப்பிட வகைக்கு உரியதாகும்?
(1) தாழ்நில ஈரவலய குகைகள் (2) தாழ்நில உலர்வலய வெட்டவெளிகள்
(3) கரையோர வெட்டவெளிகள் (4) தாழ்நில உலர்வலய குகைகள்

**4.** பருமகமாருக்கு ஒப்படைக்கப்பட்டிருந்த முக்கிய கடமை
(1) அரசனுக்கு ஆலோசனை வழங்குதல்
(2) கிராம மக்களின் நலன்புரி நடவடிக்கைகளை நிறைவேற்றுதல்
(3) நகரங்களுக்குப் பொறுப்பாகச் செயற்படுதல்
(4) குளத் தொகுதிக்குப் பொறுப்பாகச் செயற்படுதல்

● கீழே தரப்பட்டுள்ள வரலாற்றுச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு **5** ஆம், **6** ஆம் வினாக்களுக்கு விடை தருக.
A - ருவன்வெலிசாய கட்டப்பட்டமை
B - இலம்பகர்ண அரச வம்ச முதல் ஆட்சியாளனானமை
C - திரிபிடகம் நூல் வடிவமாக்கப்பட்டமை
D - முதலாவது முறையான யுத்த செயற்பாடு ஆரம்பிக்கப்பட்டமை
E - முதன்முதலாக பாரிய அளவிலான குளங்கள் அமைக்கப்பட்டமை

**5.** துட்டகைமுனு மன்னன் காலத்துக்கு உரிய சம்பவங்களைக் குறிப்பிடும் விடை எது?
(1) A, C (2) A, D (3) B, C (4) B, E

[பக். 2 ஐப் பார்க்க

**6.** வசப மன்னனாட்சிக் காலத்துக்கு உரிய சம்பவங்களைக் குறிப்பிடும் விடை எது?
(1) A, B (2) A, D (3) B, C (4) B, E

**7.** அரச அதிகாரம் படிப்படியாக வளர்ச்சியடைந்ததன் முக்கிய விளைவாக அமைவது
(1) அதிகாரம் பன்முகப்படுத்தப்படுதல்
(2) அரசுகளுக்கிடையே முரண்பாடுகள் ஏற்படுதல்
(3) பிரதேச ஆட்சியாளர் ஆதிக்கம் பெறுதல்
(4) அதிகாரம் மத்தியமயப்படுத்தப்படுதல்

**8.** இலங்கையில் சில ஆட்சியாளர்கள் அண்டை நாடுகளுடன் திருமண உறவுகளைக் கொண்டிருந்தனர் என்பதால் வெளிப்படுத்தப்படுவது
(1) அண்டை நாடுகளின் ஆட்சியாளருக்கும் இலங்கை ஆட்சியாளருக்கும் இடையே நல்லுறவு நிலவியமை
(2) இலங்கை அரசர்களின் ஆதிக்கம் வெளிநாடுகளுக்கும் பரவியிருந்தமை
(3) உறவுமுறை தொடர்புகளினால் அரசியல் அதிகாரத்தை நிலைநிறுத்தியமை
(4) வெளிநாட்டு இளவரசிமாரைத் திருமணஞ்செய்தல் இந்நாட்டு அரசர்களின் சம்பிரதாயமாக இருந்தமை

**9.** புராதன காலத்தில் பல்வேறு இனத்தவர்களில் பெரும்பாலானோர் இந்நாட்டுக்கு வருகை தந்தது
(1) சுற்றுலாவுக்காகும். (2) வியாபாரத்துக்காகும்.
(3) கல்விச் செயற்பாடுகளுக்காகும். (4) அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்காகும்.

**10.** கொடுப்பனவு தொடர்பான சில கல்வெட்டுக்களில் நாய், காகம் என்பன குறியீடாகக் காட்டப்படுவதன் மூலம் மக்கள் சமூகத்துக்கு வழங்கப்பட்ட செய்தி
(1) கொடுப்பனவின் ஒரு பகுதி நாய்களுக்கும் காகங்களுக்கும் உரித்தாகும்.
(2) கொடுப்பனவுக்கு இடைஞ்சல் ஏற்படுத்தினால் மறு பிறப்பில் அத்தகைய விலங்குகளாகப் பிறப்பு ஏற்படும்.
(3) கொடுப்பனவை நாய்கள், காகங்கள் என்பவற்றிலிருந்து பாதுகாக்க வேண்டும்.
(4) கொடுப்பனவுக்கான பிரதேசங்கள் நாய்கள், காகங்கள் என்பவற்றுக்கான சரணாலயங்களாகும்.

**11.** கலைத்துவம் மிக்கதும், நீர் முகாமைத்துவம், தொழினுட்பம் என்பன அமைந்ததுமான மேன்மையான ஆக்கம் என்று மதிக்கப்படத்தக்கது
(1) மடைக்கதவு (2) கற்பாலம் (3) யோதஎல (4) குட்டம் பொய்கை

**12.** புராதன காலத்தில் குடிப்பதற்கான நீரைப் பெறுவதற்கு கிணறுகளை அமைக்கும்போது பாரிய அளவிலான மட்பாண்டங்களை கிணற்றினுள் இறக்கி அதன் சுவர்களை மூடிவிடுவதால் எதிர்பார்க்கப்பட்டது
(1) நீரின் அமிலச் சுவையை நீக்குதல்
(2) நீர் ஆவியாதலைத் தவிர்த்தல்
(3) நீரை மேலும் குளிர்மையாக வைத்திருத்தல்
(4) நீரை மிகவும் சுத்தமாகப் பெற்றுக்கொள்ளுதல்

● கீழே தரப்பட்டுள்ள தகவல்களைக் கொண்டு **13** ஆம் **14** ஆம் வினாக்களுக்கு விடை தருக.
A - பாரிய நீர்ப்பரப்பைக் கொண்டிருத்தல்
B - குளத்து நீரை பிரதான கால்வாய்களுக்கு வெளியேற்றுதல்
C - வலுவான நிர்மாணத்துக்காக இயற்கையான கருங்கல் அல்லது எச்சக்குன்றுகள் இரண்டைத் தெரிவுசெய்தல்
D - கற்பாறைகளைப் பயன்படுத்தி ஆற்றை மறித்து நீரை வேறு திசைக்குத் திருப்புதல்
E - குளத்தில் சேரும் சேற்றை வெளியேற்றுதல்

**13.** குளக்கட்டு தொடர்பான தகவல்களைக் குறிப்பிடும் விடை
(1) A, C (2) A, D (3) B, C (4) B, D

**14.** மடைக்கதவுகள் தொடர்பான தகவல்களைக் குறிப்பிடும் விடை
(1) A, E (2) B, D (3) B, E (4) C, D

[பக். 3 ஐப் பார்க்க

**15.** மறைந்திருக்கும் குற்றவாளியைக் கண்டுபிடிப்பதற்கு முன்னைய ஆட்சியாளர்கள் கையாண்ட உத்தி
(1) குற்றவாளியின் குடும்ப உறவினர்களைக் கைது செய்தல்
(2) குற்றவாளியைக் கைது செய்யும்வரை அவன் வாழ்ந்த கிராம மக்களிடம் வரி அறவிடுதல்
(3) குற்றவாளி தொடர்பான தகவல்களை வழங்குபவருக்கு பரிசு வழங்கல்
(4) குற்றவாளியைப் பிடிப்பதற்கு முறையான உளவு சேவையைப் பயன்படுத்தல்

**16.** முற்கால இலங்கையில் பெண்களை விசேட மரியாதைக்கு உரியவர்களாக்குவதில் செல்வாக்குச் செலுத்திய முக்கிய காரணி
(1) கணவன், மனைவியின் மரியாதையைப் பாதுகாத்து வாழ்ந்தமை
(2) குலத்தின் சம்பிரதாயங்களைப் பாதுகாத்து வாழ்ந்தமை
(3) தாய்மார்களாக பொறுப்புகளை ஏற்றுச் செயற்பட்டமை
(4) சமையல் கலையில் வெளிக்காட்டிய திறமை

● பின்வரும் அட்டவணையில் A இலிருந்து F வரையுள்ள தகவல்களைக் கொண்டு **17** ஆம் **18** ஆம் வினாக்களுக்கு விடை தருக.

| அரசன் | ஆக்கிரமிப்பாளர் | வரலாற்று சம்பவம் |
|---|---|---|
| A - நான்காம் புவனேகபாகு | C - சந்திரபானு | E - இபின் பதுதாவின் வருகை |
| B - இரண்டாம் பராக்கிரமபாகு | D - செங்ஹோ | F - பெலிகல தலதாமாளிகை அமைத்தல் |

**17.** தம்பதெனியா இராசதானிக் காலத்துடன் தொடர்பான தகவல்களைக் குறிப்பிடும் விடை எது?
(1) A, C, E (2) A, D, E (3) B, C, F (4) B, D, F

**18.** கம்பளை இராசதானிக் காலத்துடன் தொடர்பான தகவல்களைக் குறிப்பிடும் விடை எது?
(1) A, C, F (2) A, D, E (3) B, C, F (4) B, D, E

**19.** கண்டியை ஆட்சி செய்த நாயக்கர் வம்ச ஆட்சியாளர்கள் பின்பற்றிய அரச மரபுரிமையானது அரசனின் பின்னர் அவரின்,
(1) மகாராணியின் சகோதரன் அரசுரிமை பெறுதல்
(2) மூத்த சகோதரன் அரசுரிமை பெறுதல்
(3) மகன் அரசுரிமை பெறுதல்
(4) மகாராணி அரசுரிமை பெறுதல்

**20.** கண்டி இராச்சியத்தின் நிர்வாகக் கட்டமைப்பில் வரி ஒழுங்கமைப்பில் 'மடிகேபத்தே' எனக் குறிப்பிடப்படும் அமைப்புக்கு வழங்கப்பட்டிருந்த செயற்பாடு யாது?
(1) போக்குவரத்து (2) நெசவு செய்தல்
(3) யானைகளைப் பிடித்தல் (4) கறுவா வெட்டுதல்

**21.** கண்டி மன்னர்களுக்கும் போர்த்துக்கேயர்களுக்கும் இடையில் போர் நடைபெற்ற இடங்கள் **நிரல்** I இலும் அவற்றை முன்னெடுத்துச் சென்ற போர்த்துக்கேய கப்பித்தான் ஜெனரல் பெயர்கள் **நிரல்** II இலும் தரப்பட்டுள்ளன. **நிரல்** I இற்கு ஏற்ப **நிரல்** II இனை ஒழுங்குபடுத்தும்போது வரும் சரியான விடை எது?

| நிரல் I | நிரல் II |
|---|---|
| 1. தந்துறை | A - ஜெரோனிமோ த அசவேது |
| 2. பலனை | B - தியோகோ த மெல்லோ |
| 3. ரந்தனிவெல | C - ஜெரோ லோபெஸ் த சூசோ |
| 4. கன்னொறுவ | D - கொன்ஸ்தாந்தினு த சா |

(1) B, A, C, D (2) B, C, D, A (3) C, A, D, B (4) C, D, A, B

[பக். 4 ஐப் பார்க்க

**22.** கண்டி அரசர்களுடனான நடவடிக்கைகளின்போது ஒல்லாந்தர் பின்பற்றிய கொள்கைகளில் மிகத் தெளிவாகப் புலப்படும் பண்பு
(1) இயலுமானவரை பொருளாதார இலாபத்தினைப் பெற்றுக்கொள்ளுதல்
(2) புரட்டஸ்தாந்து மதத்தை பிரசாரம் செய்தல்
(3) கண்டி இராச்சியத்தின் ஒரு பகுதியைக் கைப்பற்றுதல்
(4) வெளிநாட்டுத் தொடர்புகளைத் தடைசெய்தல்

● கீழே ABCD எனக் கருத்துச் சோடிகள் தரப்பட்டுள்ளன. சோடி ஒன்றில் காட்டப்பட்டுள்ள முதலாம் இரண்டாம் கருத்துகளிடையேயான தொடர்பினைப் பரிசீலனை செய்து **23** தொடக்கம் **26** வரையான வினாக்களுக்கு விடை தருக.

A - 1. பஸ்ரீலைத் தாக்குதல்
2. பிரான்சியப் புரட்சி

B - 1. ஜோர்ஜ் வாஷிங்டன்
2. அமெரிக்கப் புரட்சி

C - 1. சார் ஆட்சி
2. ரஷ்யப் புரட்சி

D - 1. அணுகுண்டு வீசப்படுதல்
2. முதலாம் உலக மகா யுத்தம்

**23.** முதலாவது வீழ்ச்சியடைவதில் இரண்டாவதின் செல்வாக்கைக் காட்டும் சோடி
(1) A (2) B (3) C (4) D

**24.** இரண்டாவதின் ஆரம்பத்திற்கு முதலாவது செயற்பாடு காரணமாகும் என்பதைக் குறிப்பிடும் கூற்றுச் சோடி
(1) A (2) B (3) C (4) D

**25.** இரண்டாவதின் வெற்றிக்கு முதலாவது வழிகாட்டல் காரணமானது என்பதைக் குறிப்பிடும் கூற்றுச் சோடி
(1) A (2) B (3) C (4) D

**26.** முதலாவதிற்கும் இரண்டாவதிற்கும் இடையே தொடர்பினைக் காட்டாத கூற்றுச்சோடி
(1) A (2) B (3) C (4) D

**27.** கைத்தொழில் புரட்சியின்போது மக்கடம்முறை பயன்படுத்தப்பட்டது
(1) இரும்பு, உருக்கு உற்பத்திக்கு
(2) புகையிரதப் பாதைகளை அமைப்பதற்கு
(3) பாலங்களை நிர்மாணிப்பதற்கு
(4) பெருந்தெருக்களை அமைப்பதற்கு

**28.** கீழே தரப்பட்டுள்ள கைத்தொழில்மயமாதலின் விளைவுகளிடையே பொருளாதாரத்துறையில் ஏற்பட்ட மாற்றத்தைக் குறிப்பிடும் விடை யாது?
A - சூழல் மாசடைதல் ஆரம்பமாதல்
B - பொருள் உற்பத்தி விரைவாகுதல்
C - நகரமயமாதல் பரவுதல்
D - சேரிப்புறங்கள், குடிசைகள் அதிகரித்தல்
(1) A (2) B (3) C (4) D

**29.** பின்வரும் கூற்றுகளுள் ஆளுநர் பிரட்ரிக் நோர்த் தொடர்பானவற்றைக் குறிப்பிடும் விடைகள் எவை?
A - அரச உத்தியோகத்தரான ஜோன் டொயிலியின் உதவியைப் பெற்றுக்கொண்டமை
B - இளவரசன் முத்துசாமியை கண்டி மன்னனாகப் பிரகடனப்படுத்தியமை
C - தளபதி மெக்டோவலின் தலைமையில் கண்டி மீது படையெடுத்தமை
D - மன்னனுக்கும் அவனது உறவினர்களுக்கும் கண்டி இராச்சிய சிம்மாசனத்துக்குரிய உரிமையை நீக்கியமை
(1) A, B (2) B, C (3) B, D (4) C, D

[பக். 5 ஐப் பார்க்க

**30.** 19 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஏற்பட்ட சமய, கலாசார மறுமலர்ச்சி பற்றிய கருத்துச் சோடிகள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றில் **பொருத்தமற்ற** சோடி எது?
(1) ஐம்பெரும் வாதங்கள் நடத்துதல் - மீகெட்டுவத்தே குணானந்த தேரர்
(2) பெரியபுராணத்தை பிரசுரஞ்செய்தல் - ஆறுமுகநாவலர்
(3) மாளிகாகந்தை வித்தியோதய பிரிவேனாவை ஆரம்பித்தல் - இரத்மலானை தர்மாலோகதேரர்
(4) கொழும்பு ஸாஹிரா கல்லூரியைத் தாபித்தல் - சித்திலெப்பை அவர்கள்

**31.** கீழே A தொடக்கம் D வரை தரப்பட்டுள்ள கூற்றுகளுள் சேர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்கள் பற்றிய சரியான தகவல்கள் அடங்கிய விடை எது?
A - கொழும்பு ஸாஹிரா கல்லூரியின் அதிபராகக் கடமையாற்றுதல்
B - 1915 இல் ஏற்பட்ட கலவரத்தை அடக்குவதற்கு இராணுவச் சட்டம் விதிக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் பௌத்தர்களுக்காக குரல் எழுப்புதல்
C - நாடகங்கள் மூலம் மதுபானத்தின் தீங்கு பற்றிச் சமூகத்திற்கு விழிப்புணர்வூட்டுதல்
D - இலங்கை தேசிய சங்கத்தைத் தோற்றுவிக்க தலைமைத்துவம் வழங்கிச் செயற்படுதல்
(1) A, B (2) A, C (3) B, C (4) B, D

**32.** யாழ்ப்பாண இராச்சியம் தொடர்பான **பிழையான** கூற்று யாது?
(1) விஜய கூழங்கை, யாழ்ப்பாண இராச்சியத்தின் முதல் ஆட்சியாளன் எனக் கருதப்படுகிறான்.
(2) போர்த்துக்கேயரின் பகைவனான விதிய பண்டார பாதுகாப்புத் தேடி யாழ்ப்பாணத்துக்குத் தப்பியோடினான்.
(3) 'யாழ்ப்பாண வைபவமாலை' என்ற பெயருடைய நூல் யாழ்ப்பாண இராச்சியம் தொடர்பான தகவல்களை உள்ளடக்கியுள்ளது.
(4) யாழ்ப்பாணம், கறுவாச் செய்கைக்குப் பெயர்பெற்ற இடமாதலால் போர்த்துக்கேயர் கவனம் செலுத்தினர்.

**33.** A தொடக்கம் D வரை தரப்பட்டுள்ள பதவிப் பெயர்களிடையே சோல்பரி மற்றும் 1978 அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டபோது நீக்கப்பட்ட பதவிப் பெயர்களை ஒழுங்குமுறையில் குறிப்பிடும் விடை எது?
A - ஆளுநர்
B - ஆளுநர் நாயகம்
C - பெயரளவு நிறைவேற்று ஜனாதிபதி
D - நிறைவேற்று ஜனாதிபதி
(1) A, B (2) A, C (3) B, C (4) B, D

**34.** சோல்பரி அரசியலமைப்பினால் இந்நாட்டுக்கு அறிமுகஞ் செய்யப்பட்ட சீர்திருத்தத்தை குறிப்பிடும் விடை எது?
(1) அரசுக் கழகம் தாபிக்கப்படுதல்
(2) சர்வசன வாக்குரிமை வழங்கப்படுதல்
(3) பாராளுமன்ற முறை அறிமுகஞ்செய்யப்படல்
(4) நிருவாகக் குழு முறைமையை ஏற்படுத்தல்

**35.** இலங்கையின் மிகப் பழமையான அரசியல் கட்சி எது?
(1) லங்கா சமசமாஜக் கட்சி (2) ஐக்கிய தேசியக் கட்சி
(3) ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி (4) லங்கா கம்யூனிஸ்ட் கட்சி

**36.** கீழே தரப்பட்டுள்ள சீர்திருத்தங்கள் எந்தப் பிரதம மந்திரியின் ஆட்சிக் காலத்தில் நடைமுறைப்படுத்தப்பட்டன?
- சிங்கள மொழியை அரசகரும மொழியாக்குதல்
- துறைமுகம், பஸ்சேவை என்பன தேசியமயமாக்கப்படல்
- வித்தியோதயா, வித்தியாலங்கார பிரிவேனாக்களை பல்கலைக்கழகங்களாக்குதல்

(1) டி. எஸ். சேனாநாயக்கா (2) டட்லி சேனாநாயக்கா
(3) எஸ். டபிள்யு. ஆர். டி. பண்டாரநாயக்கா (4) சேர். ஜோன். கொத்தலாவல

[பக். 6 ஐப் பார்க்க

● கீழே A, B, C, D எனத் தரப்பட்டுள்ளவை இலங்கையின் அபிவிருத்தியுடன் தொடர்புடைய கூற்றுகள் சிலவாகும். இத்தகவல்களைக் கொண்டு **37** ஆம் **38** ஆம் வினாக்களுக்கு விடை எழுதுக.

A - வரண்ட வலயத்தில் இதுவரை பயன்படுத்தப்படாத காணிகளை நெற்பயிர்ச்செய்கைக்குப் பயன்படுத்துதல்

B - அதிகரிக்கும் மின்சக்திக்கான கேள்வியைப் பூர்த்திசெய்வதற்கு மின்சக்தி உற்பத்தியை விரைவுபடுத்தல்

C - அரசுக்குச் சொந்தமான காணிகளை பாரிய செயற்றிட்டங்களுக்கு வழங்குதல்

D - பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையை மேலும் விரிவாக்கி தேசிய பொருளாதாரத்தை வலுவூட்டுதல்

**37.** மேலுள்ள கூற்றுகளுக்கேற்ப விவசாயக் குடியேற்றங்களைத் தாபிக்கும் முக்கிய நோக்கம் கொண்ட கூற்று

(1) A (2) B (3) C (4) D

**38.** பல்நோக்கு அபிவிருத்தி ஆலோசனை மூலம் எதிர்பார்க்கப்படும் நோக்கத்தை உள்ளடக்கியது

(1) A (2) B (3) C (4) D

**39.** 'ரெனிஸ் மைதான உறுதி மொழி', 'ஸ்டேட் ஜெனரல்' என்பன கீழே தரப்பட்டுள்ள எந்த வரலாற்று சம்பவத்துடன் தொடர்புடையவை?

(1) அமெரிக்க சுதந்திரப் போர் (2) பிரான்சியப் புரட்சி

(3) ரஷ்யப் புரட்சி (4) முதலாம் உலக மகாயுத்தம்

**40.** சர்வதேச சமாதானம், பாதுகாப்பு என்பன பேணப்படுவதற்கு ஒரு நாட்டுக்கு பொருளாதாரத் தடை விதிக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருக்கும் ஐக்கிய நாடுகள் சபைக்குரிய நிறுவனம்

(1) செயலகம் (2) பொதுச்சபை

(3) சமூக பொருளாதார சபை (4) பாதுகாப்புச் சபை

* * *

110211

OL/2019/33-T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

33 T II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

ඉතිහාසය II
வரலாறு II
History II

04. 12. 2019 / 0830 - 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு**

* பகுதி **I** இல் **முதலாம்** வினா கட்டாயமானது.
* பகுதி **II** இலிருந்து **நான்கு** வினாக்களுக்கும் பகுதி **III** இலிருந்து **ஒரு** வினாவுக்கும் விடை எழுதுக.
* எல்லாமாக **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1. (அ)** கீழே (i) எனக் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** வழங்கப்பட்டுள்ள இலங்கைப் புறவுருவப்படத்திலும் (ii) எனக் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** வழங்கப்பட்டுள்ள உலகப் புறவுருவப்படத்தின் பகுதியிலும் குறித்துப் பெயரிடுக.

(i) தெதுறுஓயா, கும்புக்கன் ஓயா, கல்லோயா நீர்த்தேக்கம், பராக்கிரமபாகு சமுத்திரம், நகதிவ, ஊர்காவற்றுறை, கொடவாய, பண்டுவஸ்நுவர, கோணேஸ்வரம் கோவில், பொல்கொல்ல அணைக்கட்டு, மகாதித்த, கொழும்பு (12 புள்ளிகள்)

(ii) பாரசீகக்குடா, லிஸ்பன், மலாக்கா நீரிணை, இத்தாலி, கல்கத்தா, சுமாத்திரா தீவு (06 புள்ளிகள்)

**(ஆ)** (i) கீழே A, B, C, D எனக் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தகவல்களுக்குரிய விடைகளை **ஒழுங்குமுறைப்படி** உங்கள் விடைத்தாளில் எழுதுக.

A - அனுராதபுர இராச்சியத்தின் இறுதி மன்னன்.
B - சீதவாக்கையின் மன்னனான மாயாதுன்னைக்கு கடற்படை உதவி வழங்கிய கள்ளிக்கோட்டை ஆட்சியாளன்.
C - புராதன வர்த்தக நிலையமான கொன்ஸ்தாந்திநோபிள் நகரத்திற்கு தற்போது வழங்கப்படும் பெயர்.
D - சுயஸ் கால்வாயை தேசியமயமாக்கிய எகிப்திய ஜனாதிபதி (04 புள்ளிகள்)

● A, B எனக் குறிப்பிடப்பட்டுள்ள ஒளிப்படங்களை அவதானித்து கேட்கப்பட்ட வினாக்களுக்குரிய விடைகளை வினா இலக்க **ஒழுங்குமுறைப்படி** உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. A இனால் காட்டப்பட்டுள்ள கல்வெட்டைக் குறிப்பிடும் பெயர் யாது?
2. இதனை ஆக்கிய மன்னனின் பெயர் யாது?
3. இம்மன்னனுக்குரிய அரச வம்சத்தின் பெயர் யாது?
4. இக்கல்வெட்டு நிறுவப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நகரம் எது? (04 புள்ளிகள்)


A

(iii) 1. B இனால் காட்டப்பட்டுள்ள நபரின் பெயர் யாது?
2. இரண்டாம் உலகமகா யுத்தத்தின்போது அவர் எந்த நாட்டின் ஆட்சியாளனாக இருந்தார்?
3. இவரின் அரசியல் தத்துவத்திற்கு வழங்கப்படும் பெயர் யாது?
4. பகைவர்களை அடக்குவதற்காக அவரால் தாபிக்கப்பட்ட இரகசிய பொலிசாருக்கு வழங்கப்பட்ட பெயரைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)


B

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**2.** (i) கல்வெட்டுக்கள் அமைக்கப்பட்ட இயல்புக்கமைய அவற்றை வகைப்படுத்தக்கூடிய முறைகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் A தொடக்கம் D வரை தரப்பட்டுள்ள ஒவ்வொரு கூற்றுக்கும் பொருத்தமான விடையை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து **ஒழுங்குமுறைப்படி** எழுதுக.

A - இலங்கைப் படத்தை வரைந்த முதல் கிரேக்க இனத்தவர்

B - அனுராதபுர ஆரம்பகாலத்தில் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்ட எழுத்துகளுக்கு வழங்கப்பட்ட பெயர்

C - தொல்பொருள் அகழ்வினால் இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்ட மிகப்பழைய நாணயங்களுக்கு வழங்கப்பட்ட பெயர்

D - வசப மன்னன் காலத்தில் ரிஷிகிரி அமைச்சரினால் நகதிவ ஆட்சி செய்யப்பட்டதைக் குறிப்பிடும் மூலாதாரம்.

(மெகஸ்தீனிஸ், பிராமி, சமஸ்கிருதம், தொலமி, கஹாபண, வல்லிபுரம் பொற்சாசனம், ரிதிமஸ்ஸ, பணாகடுவ செப்புத்தகடு) (04 புள்ளிகள்)

(iii) வரலாற்றைக் கட்டியெழுப்புவதில் கல்வெட்டுக்கள் முக்கியத்துவம் பெறும் விதத்தை **இரண்டு** விடயங்கள் கொண்டு விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) வரலாற்றைக் கற்பதனால் பெறக்கூடிய நன்மைகள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

**3.** (i) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதர்கள் உபகரணங்களை செய்வதற்குப் பயன்படுத்திய **மூன்று** வகையான கற்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) A - வரலாற்றுக்கு முற்பட்ட மனிதர்கள் வாழ்ந்த தாழ்நில ஈரவலயக் குகைகள் **இரண்டினையும்**

B - அவர்கள் வேட்டையாடிய விலங்குவகை **இரண்டினையும்**

**ஒழுங்குமுறையில்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) முன் வரலாற்றுக் காலத்தில் மனித வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்கள் **இரண்டினை** விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆரம்ப வரலாற்றுக் காலத்தில் குடியிருப்புகளின் பரம்பல் கோல வளர்ச்சியின் இயல்புகள் **மூன்றினை** விளக்குக. (06 புள்ளிகள்)

**4.** (i) A - சிறு தூபிகளை உள்ளடக்குவதற்காக அமைக்கப்பட்ட கட்டடம்

B - குளத்தில் ஏற்படும் நீர் அலைகளால் குளக்கட்டு அரிக்கப்படுவதைத் தடுப்பதற்கு உருவாக்கப்பட்ட அமைப்பு

C - மின்னல் தாக்கங்களில் இருந்து பாதுகாப்புப் பெற பாரிய தூபிகளின் உச்சியில் பொருத்தப்பட்ட கருவி

என்பவற்றை **ஒழுங்குமுறைப்படி** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) A - மகாவலி கங்கையுடன் தொடர்புடைய புராதன கால்வாய்கள் **இரண்டினையும்**

B - கலாஓயா மற்றும் மல்வத்துஓயா என்பவற்றை மறித்துக் குறுக்காகக் கட்டப்பட்ட பாரிய குளம் ஒவ்வொன்றையும் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) பூங்கா அலங்காரம், பாதுகாப்பு போன்ற விடயங்களை அடிப்படையாகக் கொண்ட புராதன நகர நிர்மாணத் தொழினுட்பம் நிலவியதை சீகிரியாவை அடிப்படையாகக் கொண்டு எடுத்துக் காட்டுக. (05 புள்ளிகள்)

(iv) புராதன காலத்தில் இந்நாட்டில் முன்னேற்றமடைந்த வைத்திய சேவை நிலவியதை **மூன்று** விடயங்களை எடுத்துக்காட்டி விவரிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

**5.** (i) போர்த்துக்கேயர் இலங்கைக்கு வருகை தந்தபோது காணப்பட்ட **மூன்று** இராசதானிகளின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் A தொடக்கம் D வரையிலான கூற்றுகளுக்குப் பொருத்தமான விடைகளை அடைப்புக் குறிக்குள் இருந்து தெரிவுசெய்து **ஒழுங்குமுறைப்படி** குறிப்பிடுக.

A - கி.பி. 1505 இல் காலியை வந்தடைந்த முதலாவது போர்த்துக்கேய மாலுமி

B - கி.பி. 1602 இல் முதலாம் விமலதர்மசூரிய மன்னனைச் சந்திக்க வந்த ஒல்லாந்த தூதுவன்

C - கி.பி. 1638 இல் ஒல்லாந்தருடன் உடன்படிக்கை செய்துகொண்ட கண்டி மன்னன்

D - கி.பி. 1762 இல் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்க மன்னனைச் சந்திப்பதற்கு வந்த ஆங்கிலேயத் தூதுவன்

(ஜோன் பைபஸ், றொபட் அன்ட்ரூஸ், லோரேன் சோ டி அல்மெடா, பிரான்சிஸ்குத அல்மேதா, இரண்டாம் இராஜசிங்கன், ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன், ஜோரிஸ்வான் ஸ்பில் பேர்ஜன், சீபல்த வாட்) (04 புள்ளிகள்)

(iii) போர்த்துக்கேயருக்கும் ஒல்லாந்தருக்கும் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்ற முடியாமல் போனமைக்கான காரணங்களை **இரண்டு** விடயங்களினூடாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) கி.பி. 1818 இல் கண்டியில் ஏற்பட்ட சுதந்திரப் போராட்ட இயக்கம் பற்றி பின்வரும் தலைப்புகளில் சுருக்கமாக விவரிக்குக.

A - அதற்குச் செல்வாக்குச் செலுத்திய பின்னணி

B - தலைமைத்துவம்

C - போராட்ட இயக்கம் தோல்வி அடைந்தமைக்கான காரணங்கள்

(06 புள்ளிகள்)

**6.** (i) பிரித்தானியரால் இந்நாட்டின் மலைப்பிரதேசங்களில் ஆரம்பிக்கப்பட்ட பெருந்தோட்டப் பயிர்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை பெருமளவில் பரவிய மலையக மாவட்டங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை வளர்ச்சியடைந்தமைக்குக் காரணமான கோல்புறூக்கின் ஆலோசனைகள் **இரண்டினைச்** சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை காரணமாக இந்நாட்டில் ஏற்பட்ட பொருளாதார மற்றும் சமூக மாற்றங்கள் **ஒவ்வொன்றினை** எடுத்துக்காட்டி அவற்றைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

**7.** (i) A - சுதந்திர இலங்கையின் முதலாவது பிரதம மந்திரி

B - கி.பி. 1972 இலங்கைக் குடியரசின் பிரதம மந்திரி

C - கி.பி. 1978 இலங்கைக் குடியரசின் முதலாவது நிறைவேற்று ஜனாதிபதி

ஆகியோரின் பெயர்களை **ஒழுங்குமுறைப்படி** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கி.பி. 1978 அரசியல் யாப்புக்கேற்ப அறிமுகஞ்செய்யப்பட்ட புதிய வாக்களிப்பு முறைகள் **இரண்டினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) சுதந்திரத்தின் பின்னரான முப்பதாண்டு காலங்களில் அதிகாரத்துக்கு வந்த அரசாங்கங்களினால் இந்நாட்டின் வர்த்தக விவசாயத்தின் முன்னேற்றத்திற்காக எடுக்கப்பட்ட **இரண்டு** செயற்பாடுகளைக் குறிப்பிட்டு, அவற்றைச் சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) சுதந்திரத்தின் பின்னர் இலங்கையின் கைத்தொழில்துறை முன்னேற்றத்துக்காக மேற்கொண்ட செயற்பாடுகள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

|பக். 4 ஐப் பார்க்க

## பகுதி III

**8.** (i) பதினெட்டாம் நூற்றாண்டில் குடியேற்ற நாடுகளை தாபிப்பதில் ஈடுபட்ட ஐரோப்பிய நாடுகள் (பிரித்தானியா தவிர) **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கைத்தொழில் புரட்சிக் காலத்தில் ஏற்பட்ட புதிய உற்பத்திகள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றுடன் தொடர்புடைய நபர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து **ஒழுங்குமுறைப்படி** குறிப்பிடுக.

A - பறக்கும் நூனாழி
B - பாதுகாப்பு விளக்கு
C - புகைக் கப்பல்
D - தந்தி முறை

(ஜோன் கே, குக்லி மார்க்கோனி, சாமுவேல் மோஸ், ஹென்றிபெல், றொபர்ட் புல்டன், தோமஸ் நியூகொமன், ஹம்பிறி டேவி, சாமுவேல் குறொம்டன்) (04 புள்ளிகள்)

(iii) கைத்தொழில் புரட்சிக் காலத்தில் பிரித்தானியாவில் இரும்பு, உருக்குக் கைத்தொழிலில் ஏற்பட்ட முன்னேற்றங்களை **இரண்டு** உதாரணங்களைக் குறிப்பிட்டு விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கைத்தொழில் புரட்சியின் செல்வாக்குக் காரணமாக விவசாயத்துறையில் ஏற்பட்ட வளர்ச்சியினை **மூன்று** உதாரணங்களைக் குறிப்பிட்டு விளக்குக. (06 புள்ளிகள்)

**9.** (i) A - முதலாம் உலக மகாயுத்தத்துடன் தொடர்பான நாடுகள் உருவாக்கிய **இரண்டு** முகாம்களையும்
B - சராஜிவோ நிகழ்வினால் கொல்லப்பட்ட ஆஸ்திரியாவின் முடிக்குரிய இளவரசனின் பெயரையும்
A, B என **ஒழுங்குமுறைப்படி** எழுதுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் தகவல்களுடன் தொடர்புடைய விடைகளை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து **ஒழுங்குமுறைப்படி** எழுதுக.

A - ரஷ்யாவை ஆக்கிரமிக்கச் சென்று தோல்வியடைந்த பிரான்சின் சக்கரவர்த்தி
B - கி.பி. 1934 இல் மஞ்சூரியாவை ஆக்கிரமிப்புச் செய்த நாடு
C - நாசிகளுக்கு எதிரான போரில் பிரித்தானிய மக்களைத் தூண்டிய அந்நாட்டின் பிரதம மந்திரி
D - இரண்டாம் உலக மகாயுத்த காலத்தில் ஐக்கிய அமெரிக்க அரசின் ஜனாதிபதி

(சார்ள்ஸ் டிகோல், நெப்போலியன் பொனபட், வூட்றோ வில்சன், லொயிட் ஜோர்ஜ், பிராங்க்ளின் ரூஸ்வெல்ட், ஜேர்மனி, ஜப்பான், வின்ஸ்சன்ட் சேர்ச்சில்) (04 புள்ளிகள்)

(iii) முதலாம், இரண்டாம் உலக மகாயுத்தத்தில் ஐக்கிய அமெரிக்க அரசுகள் இணைந்து கொள்வதில் செல்வாக்குச் செலுத்திய **இரண்டு** சம்பவங்களைச் சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) சர்வதேச சங்கம் உலக சமாதானத்தைப் பாதுகாக்க முடியாமல் போனதில் செல்வாக்குச் செலுத்திய **மூன்று** காரணங்களை விளக்குக. (06 புள்ளிகள்)

* * *

110211





33 STE II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2019**

**ඉතිහාසය II**
**வரலாறு II**
**History II**

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය
சுட்டெண்
Index No. ..........................




[අනෙක් පිටුව බලන්න / மறுபக்கம் பார்க்க / See next page

